க.ஆ. 1136 ஓம் விளைநலம் 198

யாழ்ப்பாணம் புலோலி இ.வி. ஐயம் பிள்ளை இயற்றிய (கி.பி.190)

## தென்பாண்டி நாட்டு

# பஞ்சபூத தலப் பதிகம்





பதிப்பித்தோன் : கம்பபாதசேகரன், அ.மு.தமிழறிஞன், நெல்லை

அடியேனுக்கு வழிகாட்டி வந்த நண்பர்
தொண்டர்சீர் பரவும் சிவத்திருத்தொண்டர்
கவிஞர் **மு.சு. சங்கர்** அவர்கள் நினைவாக

# சிவன் இரவு விழா மலர்



வெளியிட்டோர் :
**கம்பன் இலக்கியப் பண்ணை**
2-97H, ஆனந்தவல்லியம்மன் கோயில் தெரு,
ஆரல்வாய்மொழி, வடக்கூர்–629301.
குமரி மாவட்டம். செல் : 94878 02389

வள்ளுவம் 2054 ம் ஞ குடமதி 6 உ குருகு (18-02-2023)

ஓம்
விநாயகர் துணை
யாழ்ப்பாணம், புலோலி
இ.வி. ஐயம் பிள்ளை இயற்றியது (கி.பி. 1901)

# தென்பாண்டி நாட்டு

# பஞ்சபூத தலப் பதிகம்

## சங்கரன்கோயில் பதிகம்

ஐங்கார மூர்த்தி பாதம் அன்பொடு பூசை செய்து
சங்கர நாதர் ஆகித் தற்பரையாகி மாலாய்ப்
பொங்கரவு அணிந்து நின்ற புரிசடைப் பநனை நாயேன்
அங்கையின் மலர் கொண்டு ஏத்தி அருள் பெறப் பாடு
வேனே

ஓங்காரத்து உட்பொருளாய் ஒளியாய் வானாய்
உண்மையதாய் அடியர் மனத்து உறையுஞ் சோதி
ஆங்காரத்தைத் துடைத்தே அடியேன் உய்ய
அருள் தந்த பெருங்கருணை யார் தந்து ஆள்வார்
ரீங்காரமிட்டு அளிகள் மொய்க்குங் கொன்றையினை
அணிந்து சங்கரனார் கோயின் மேவித்
தீங்கோல வரும் அடியார் தீங்கு நீக்குந்
திருவுருவங் கண்டு துயர் தீர்த்திட்டேனே! 1

தீர்த்திட்டேன் ஊன் உடலை வேறாய்ச் சோதித்
திருவுருவந் தெவிட்டாத இன்பமாகப்
பார்த்திட்டேன் பாச வினை பாழாய்ப் போகப்
பரனே! நின் நுதல் விழியால் எரியக் கண்டேன்
ஆர்த்திட்டேன் மான் மழுவும் ஆடு பாதத்து
அணி கழலுங் கண்டு அடியேன் அன்பினாலே
வேர்த்திட்டேன் விமலா! உன் விந்தை தன்னை
விண்ணவரும் அறிய அரிது விமலமூர்த்தி 2

மூர்த்தியாய்த் தேவருமாய் முனிவராகி
மூலமாய் மூவராய் நின்ற உன்தன்
சீர்த்தி யார் பாட வல்லார் தேவதேவா!
தெளிந்தவர்கள் மொழிவதற்கும் அரிய சோதி
கார்த்திகேயனைப் பயந்து தேவர் இன்னல்
களைந்த பெருங்கருணை வெள்ளம் பெற்று உன்னைப்
பூர்த்தியாய்ப் பெறப் பணிந்தேன் மலர் கொண்டு ஏத்திப்
பொற்பாதந்தனை அடியேன் பூசித்தேன்! 3

பூசித்தேன் அரி அயனும் தேடிக் காணாப்
பொற்பாதந்தனை நாயேன் புகழ்ந்து போற்றி
யாசித்தேன் அன்று புர மூன்றுஞ் சுட்ட
அழல் நகையை என் பாசவினைகள் வெந்து
தூசிக்கே நிகராகத் தொலைத்து உன்றன்
துங்க மலர்ப் பாதமதைத் துணையாய்த் தந்து
நேசித்தே இருக்க அருள் புரிவாய் எங்கு
நிறைவாக உரையாக நின்ற சோதீ 4

சோதியாய் அருள் வடிவாய் துதியாய்ச் சொல்லாய்ச்
சுருதி முதல் பல கலையாய்த் தொண்டராகி
நீதியாய் நீள் சடையோனாகி நின்ற
நின்மலனே! சங்கரனார் கோயின் மேவும்
ஆதியாய் இலிங்கமுமாய் நடேச மூர்த்தி
யாகி அருட்சத்தி ஒரு பாகமாகிப்
பாதியாய் ஒன்றாகி நின்ற உன்னைப்
பங்கயத் தாள் இம்மையிலே பணிந்திட்டேனே 5

பணிந்திட்டேன் பல வினைகள் பறந்தது இன்றே
பரமன் அடி என் சிரத்தில் படிந்த நன்றே
துணிந்திட்டேன் இனி அஞ்சேன் கமல பாதந்
துணையாக எப்போதுந் தொண்டு செய்வேன்

அணிந்திட்டேன் திருநீறும் ஐந்தெழுந்தும்
அம்பலத்தில் நின்றாடும் அமலன் தாள் கீழ்க்
குனிந்திட்டேன் சங்கரனார் கோலங் கொண்டேன்
குளிர் மதியம் புனைந்த பிரான் கொடுத்த பேறே. 6

பேறே! என் பெருவலியே! அடியேன் உன்னைப்
பிரியாமல் இருந்திட நற்பேறு தந்த
கூறே! நன் கருணை வெள்ளம் பெற்றுளோர்க்குக்
குறைவேது நினைவேது கோலமேது
மாறேன் நின் மலர்ப் பதத்தைப் பூசை செய்வேன்
மருள் வரினு மயிலோனை வாழ்த்திக் கொள்வேன்
ஆறே நின் முடி சூடி ஆடுஞ் சோதி
அற்புதமே! அருமருந்தே! அமுதே! பொன்னே! 7

பொன்னே! நற்புது மலரே! பூவே! பூவில்
பொருந்திய எல்லா உயிர்க்கும் பொறியாய் நின்ற
மின்னே! என் உள்ளத்தில் வெளியாய் நிற்கும்
விரிசுடரே! விண்மணியே! விருப்ப மிக்க
அன்னே என் அப்பனே அன்பே! அன்பர்
அகத்தில் உறை அற்புதமே! அழகே! வானோர்
எந்நேரமும் வணங்கும் கயிலை வாழ்வே!
ஏகனே! அடியேனை இரட்சிப்பாயே! 8

அடியேனாய் அன்னையுமாய்ப் பிதாவுமாகி
அறிவரிய முதலாகி அந்தமாகி
மிடியோனாய் மதுரையிலே விறகு விற்று விருப்ப
மிக்க பாணனது வினையைத் தீர்த்துப்
படியோனாய் மண் சுமந்து அடியும் பட்ட
பசுபதியே! பாத மலர் பணிந்த இந்தக்
கொடியோனைப் பிறவாமல் நீக்க வந்த
கோலம் அதை மலர் தூவிக் கும்பிட்டேன் 9

கும்பிட்டேன் நின் பாதம் போற்றி! போற்றி!
குஞ்சரனே நின் பாதம் போற்றி! போற்றி!
நம்பிட்டேன் இனிப் பிறவி அறுத்தாய் போற்றி!
நம்பிரான் நின் பாதம் போற்றி! போற்றி!
அம்பிட்டேன் அருள் சுரந்து ஆண்டாய் போற்றி!
அம்பலத்தில் கூத்தா நின் அடிகள் போற்றி!
வெம்பிட்டே அமுத முகம் பார்த்தாய் போற்றி!
வெள்ளிமலை உடையானே போற்றி! போற்றி!

## தாருகாபுர பதிகம்

மகார எழுத்தாகித் திருமாலொடு நான்முகனாய்
அகார எழுத்தாகி அருள் அம்பலத்தாடுகின்ற
சிகார எழுத்தான தில்லைத் தேசிகன் ஈன்ற முதல்
உகார எழுத்தான ஓங்காரன் அடி போற்றி! 1

ஐயா நின் அடியேன் அலைந்தேன் அலை நேர் உடலை
மெய்யா எண்ணி நிதம் வினையே பல செய்து உழன்றேன்
பொய்யா மாயை எனைப் பொருந்தாமல் அருள் சுரந்து
கையாலே அழைப்பாய் கடல் நஞ்சுண்ட கண்டத்தானே 2

கண்ணே! கண்மணியே! கயிலைத் திருக்கற்பகமே!
விண்ணே! விண் மணியே! வினை தீர்த்தருள் வித்தகனே!
எண்ணே! என் வினைகள் எரிந்து ஏகத் தழல் விழியால்
பண்ணே! நின் அடியேன் படும்பாடு நீ பார்க்கலையோ 3

பாராய் நான்முகனாய்ப் படி கீண்டிய மாலாதி
யோராலும் உணரா உப்புறமாகி ஒன்றாய்ச்
சீராய்ச் செல்வமுமாய்த் திருச்சிற்றம்பலத்தினிற்கு
நேராய் நின்னை அல்லா நெறி யார் தர வல்லாரே 4

கண்டே நின் அகத்துட் கயற்கண்ணி தன் காதலனே
தொண்டே செய்தறியேன் துதி செய்யத் தொடக்கு அறியேன்
அண்டேன் உன்னை அல்லால் இனி யாரையு நொத்து உழலேன்
இன்றே என் வினை தீர்த்து இருள் ஏகப் பணித்தருளே5

தாராரும் புகழ் சீர்த் திருத்தாருக நீள் புரத்துக்
காராரும் மலை சூழ் கழிக்காவில் உறைபவனே
வாரார் கொங்கை மலை மங்கை ஒன்றாயுடனே
நேராய் வந்து அடியேன் வினை நீக்கி அருள்வாயே 6

பொன்னே! புண்ணியனே! புரிநீள் சடைப் பூவண்ணனே
முன்னே முப்புரமு(ம்) முடியச் சிலை தொட்டவனே
மின்னே மெய்ச்சுடரே! மிளிர் கொன்றை புனைந்தவனே!
அன்னே! நின்னை அல்லால் எனை ஆள்பவர் ஆர் இனி
யே! 7

பாடும் பரிசு அறியேன் பணி செய்து உன் பனிமலர் தாள்
கூடும் பரிசு அருள்வாய் தில்லைக் கூத்துடைக் கோமளமே!
வாடும் பயிர் தழைக்க வந்த மழை போல் யான்
தேடும் பதத்தை என்றன் சென்னியில் வைப்பாயே! 8

அத்தா நின்னடி என் அருமாயையில் ஆழாமல்
முத்தா நின்னடி என் முடி மேல் வைத்து அருள்புரிவாய்
சித்தா தேவர் தொழுந் திருத்தாருக நீள் பரத்து
நித்தா உன்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே 9

பணிவேன் நன்மலர்கள் பறித்து அற்பொடு என் கரத்தால்
அணிவேன் நின் கழலில் இனி யாரையு(ம்) நொந்து உழலேன்
துணிவேன் நின்னடியார் துதி செய்யத் தொழும்பு செய்தே
தணிவேன் நின் அடிக்கே போற்றி! சங்கர தாள் போற்றி!

# கரிவலம் வந்த நல்லூர் பதிகம்

செய்ய சேமத் திருநதி வாழ்த்திடு
மெய்யனார் தனை வேண்டுதல் செய்திடுங்
கையனான் கடையேனை இங்கு ஆண்டிடும்
ஐயன் ஆனைமுகன் அருட்பாதமே 1

பாதமே தந்து பந்தம் அற்று உன் அடிப்
போதமே அருள் பூம்பொழில் பால் வண்ணா
நாத ஒப்பனையாள் திரு நாயகா!
ஏது மற்று எனக்கு ஈரடி தஞ்சமே! 2

தஞ்சம் உன்னடித் தாமரை அல்லது
அஞ்சல் என்று இனி ஆள்பவர் ஆர் எனை
நஞ்சு கண்டத்து அடக்கிய நாயகா!
பஞ்ச நீங்கிடப் பார் எனைப் பால்வண்ணா! 3

பால் வண்ணா திருப் பார்வதி ஓர் புற(ம்)
மால் வண்ணா மறு மாயையை நீக்கிடுங்
கால் வண்ணா கடையேன் உய்ந்திடு நெறி
கோல் வண்ணா குளிர் கொன்றையந் தாமனே! 4

தாமனே தையல் ஒப்பனையாள் திரு
வாமனே வையம் வானொடு வானவர்
காமனே அயன் கார் வண்ணன் ஆகிய
ஓமனே எனக்கு உன் அருள் ஈந்திடே. 5

அருளுமாகி அருமறை கண்டிடா
மருளுமாகி மறை முதலாகிய
பொருளுமாகிய பூரண பால் வண்ணா
இருள் அகற்றி இணையடி சூட்டிடே. 6

சூட்டுவாய் திருத்தொண்டர் குழாத்தினில்
பூட்டுவாய் அருட்போத நெறி தந்து
கூட்டுவாய் உன்றன் கூத்துடைத் தாளினை
மாட்டுவாய் மலை மங்கை மணாளனே 7

மங்கை ஒப்பனையாள் மணவாளனே
செங்கை மாலுந் திசைமுகனுந் தொடர்ந்து
எங்கணும் அறியாத இணையடி
அங்கையால் தொழுதேன் அருள் போற்றியே! 8

போற்றினேன் உன்றன் பொன்னடி பால் வண்ணா
கூற்றின் நேர் உடல் கொண்டு அலைந்தேன் துயர்
மாற்றினேன் நின் மலரடி கொண்ட பின்
ஆற்றினேன் மயல் அம்பாலத்தையனே 9

ஐயனே அடியார் அகத்தே ஒளிர்
மெய்யனே எழில் வெண்பிறை சூடிய
செய்யனே திருப்பால் வெண்ணையம் பதி
உய்யவே உலகோர் திருவாழியே.

## தென்மலைப் பதிகம்

வண்டார் சோலைத் தென்மலை வாழும் வாதேசன்
தொண்டார் தோலைத் தொல்வினை ஏகச் சுகம் ஈந்து
கொண்டான் கோலக் கொம்பேரிடையாள் கொழுநன் தான்
பண்டார் கோலப் பரமன் அடிக்கே பணிவேனே 1

பணிவேன் ஐயா பார்வதி நேசா பால் வண்ணா
அணிவேன் ஐயா அழகுடை நீற்றை அருளாகத்
துணிவேன் ஐயா ஐந்தெழுத்து ஓதித் துரிசு அற்றுக்
கணிவேன் ஐயா கூற்றுதைத் தாள் கீழ்க் கா அத்தா 2

அத்தா பார் கால் அயனாய் மாலாய் அனலாகிச்
சித்தாகாய வெளியாம் விமலா தென்மலையா
பத்தா பத்தர் இன்னல் அகற்றிப் பய நல்கு
முத்தா முத்திக் கரை சேர்த்து எனை ஆள் முக்கண்ணா 3

கண்ணா கண்ணன் தங்கையை மனையாய்க் கைக்
கொண்டாய்
அண்ணா அன்பர் அன்பை அகத்தே அருள் செய்தாய்
விண்ணா விண்ணோர் வேண்டிட வேலன் தனை ஈந்தாய்
உண்ணா முலை பதி உன்னடி போற்றி உய்ந்தேனே 4

உய்ந்தேன் உன்னை ஊன் உடலோடு உட்கண்டேன்
நைந்தேனின்னும் இன்னல் அகற்ற நலிகின்றேன்
பைந்தேன் ஊறும் பனிமலர்க் கொன்றைப் பால் வண்ணா
வெந்தே இன்னம் ஏழையை ஆள எண்ணாயோ 5

எண்ணா யாவும் உன் அருள் அல்லாது இலையான
பண்ணா பாசப் பற்றற நீக்கும் பகல் போன்ற
வண்ணா வன் கூவிள மலர் சொரி தென்மலை வாழும்
அண்ணா சிவபரிபூரணியம்பாள் அணை தோளா 6

தோளார் அரவந் தொல்புலி ஆடைச் சுரர் போற்றுந்
தாளார் அரவந் தந்து எனை ஆள் தென் சயிலத்தா
வாளார் கண்ணி சிவைபரி பூரணி மகிழ்ந்து ஏத்தும்
ஆளா அன்பர்க்கு அடியவனாக அருள் போதா 7

போதா பொன் போல் இலகு சடைப் பூ வண்ணத்தா
காதார் சோதிக் குண்டலம் வழுவக் கனகத்தே
வாதாடிய உன் வண்கழல் அணி மாமலர் ஒத்த
பாதா பாதந் தந்து எனை ஆளப் பாராயோ 8

பாராய் நீராய்ப் பகலாய் இரவாய்ப் பரமாய
நேரா நின்னை நினைபவர் நிற் கண்டருள் பெய்வார்
ஆராய் வானோர் வண்சிறை நீக்கிய அங்கண்ணா
வாராய் சரணங்கள் மணி சரணம் வந்தித்தேன் 9

கண்டேன் பாசக் கட்டது நீக்குங் கழல் போற்றிக்
கொண்டேன் கோலக் கூற்றுதை பாதக் குறி போற்றி
நின்றேன் அடியேன் நீள் துயர் அற்று நிமலன் தாள்
தொண்டே எளியேன் சொந்தம் எனப் பெற்று உய்ந்தேனே
10

## தேவதானப் பதிகம்

அத்தனே! அகாரமாகி அருள் வெளியாகி நின்ற
சித்தனே! தேவதானச் செல்வமே! தேவர் போற்று
முத்தனே! மூவரான முக்கணா ஃயமுகத்துக்கு
அத்தனே கடையேன் உய்யக் கமல பொற்பாதங் காட்டே1

செய்யனே! தேவதானச் செல்வனே! தெளிந்துளோர்கள்
மெய்யனே! மேரு வில்லா! விட அரா நாணதாகப்
பொய்யின் நேர் புரங் கடிந்தும் புண்ணியர்க்கு அருள் ஈந்து
ஆண்டாய்
ஐயனே! அடியேன் உய்ய அருள் அறிவு அருளுவாயே 2

கண்ணன் ஓர் ஏனமாகிக் கமலத்தோன் ஏகினமாகி
அண்ணலே அறிய ஒண்ணா அருட்திருக் கோலந்
தன்னை
மண்ணுளே புழுக்கூடு ஏற்ற மதியிலேன் அறிந்து போற்ற
விண்ணுளே உருவமாகி விடையின் மேல் வருவாய்
போற்றி 3

போற்றினோர்க்கு அருளுமாகிப் புவியுளோர் குருவுமாகிக்
கூற்றின் நேர் பெண்ணுமாகிக் குலவிய ஆணுமாகி
ஏற்றினேர் கொடியனாகி இலங்கிடுந் தேவதேவா
காற்றின் நேர் பஞ்சுக்கு ஒப்பாய்க் கடிந்திடு என் கவலை
தானே 4

உன் அருளுற்ற தொண்டர்க்குறு தொழில் ஏவலாளா
இன்னல் அற்று அன்னப் பிச்சை எடுத்து அமுது ஊட்டி
வைத்தாய்
மின் அனையாளும் நீயும் விடை மிசை வந்து மாயப்
பின்னலை நீக்கி இன்றே பேரின்பம் நல்குவாயே 5

வண்டு நேர் குழலாள் ஒன்றாய் வரை மகள்தனைப் பாகத்
திற்
கொண்டு நேர் வந்தே என்றன் குறைகளைத் தீர்த்தாள்
ஈசா
பண்டு நேர் அடியார் கொண்ட பதம் அடியேனுங் கொண்டு
தொண்டு நேர் புரிய உன்றன் துணைப் பதங் காட்டு
வாயே 6

வான் உயர் மலைகள் சூழ்ந்து வளர் தேவதானம் மேவும்
பானுவே அனைய சோதிப் பராபரா அடியேன் கண்முன்
மானுடன் மழுவும் மற்றும் வகைகளுங் கொண்டு என் தாயுந்
தானுமே வந்து பாலன் தழைத்திட அருள் செய்வாயே 7

அன்னை நீ அப்பன் நீ என் அகமதில் அறிவாய் நிற்கு
மின்னு நீ விருப்பு நீ என் விவேகமு நீயே யானாய்
இன்னல் நீ நீக்காயானால் எளியன் வேறு ஆரை
நோவேன்
கன்னல் சூழ் தேவதானக் கடவுளே கருணை கூரே 8

கயிலை வாழ் கண்ணே போற்றி! கருமணி கண்டா போற்றி!
மயிலை ஆள் வேலா போற்றி! மலர் அயன் ஆனாய் போற்றி!
அயிலை நேர் விழியாள் அம்மையானதும் நீயே போற்றி!
குயிலை நேர் உமையைப் பாகங் கொண்ட உன் கோலம் போற்றி! 9

சோதியே வாழி வாழி சொற் புவியோர்கள் வாழி
ஆதியே வாழி வாழி அந்தமின் மறையோர் வாழி
நீதியே வாழி வாழி நின் அடியவர்கள் வாழி
வாதியாது எனை உன் தாளின் வைத்தருள் வாழி வாழி! 10

பிழைத்தது பொறுத்தல் பெரியவர் கடனே—கம்பன்



நூல் உதவி : பழனிநயினார், கோமதிநகர்